

ஓம்.



திருவண்ணாமலை

# ஸ்ரீ ரமணமகரிஷிகள்

## சரிதச்சுருக்கமும்,

## தோத்திரப்பாக்களும்



இஃது

ஈ. கே. ஜானகிராமசர்மா, அவர்களால்

தொகுக்கப்பட்டு

திருவண்ணாமலை
P. N. கன்னைய நாயுடு அவர்களது
மனோன்மணி நர்த்தனம் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது

22—12—1923, விலை அணா 1.

91/1

# முகவுரை

பெரியீர்!

இப்புத்தகத்திற்கண்டுள்ள. செய்யுள்களும், இன்னும் இவைபோன்ற பல செய்யுள்களும் வரைந்துள்ள, ஓர் கையெழுத்துப்புத்தகம்மகரிஷிகள் புத்தகாலயத்துள் இருக்கக்கண்டேன் செய்யுள்கள் என்மனத்தைக்கவர்ந்தமையால் அவற்றைச்சிறிது சிறிதாக வெளியிடத்தயாரித்து முன்வந்தேன். எடுத்தகாரியம் இனிது நிறைவேறுமாறு, இறைவனை இறைஞ்சுகின்றேன். இதிற்கண்டுள்ளசரிதசுருக்கம் யான் எழுதியது.

இங்ஙனம்,

ருத்திரோத்காரிஹூ
மார்கழிமீ 5௳
திருவண்ணாமலை

ஏ. கே. ஜானகிராமசர்மா.

ஸ்ரீ

ரமணஸகாயம்.

# ரமண சரிதச்சுருக்கம்.

---

ராமநாதபுரம் ஜில்லாவில் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் சிறப்பித்து பாடல்பெற்ற திருச்சுழியல் என்ற க்ஷேத்திரத்திலே, சுந்தரமையர் என்ற பெரியார் இருந்தார். அவருக்கு வக்கீல் உத்தியோகம் அவர் தர்மபத்தினியான அழகம்மாள் பால்மூன்று ஆண்மகவைப் பெற்றார் அம்மூவர்களில் ரமணமகரிஷி த்விதியகுமாரர் தக்கவயதிலே இவருக்கு வித்தியாப்பியாஸம் செய்வித்து அவ்வூர் பள்ளியில் விட்டனர் பிறகு மேற்படிப்புக்காக மதுரைமாநகரில் உயர் தரக்கலாசாலையில் கொண்டு விடுத்தனர். அப்போது இவருக்கு வயதோ பதினேழு. வகுப்போ மெட்ரிகுலேஷன் பிரதி தினமும் சொக்கநாத சமேத மீனாக்ஷியை தரிசித்து வந்தார். அவ்வாறு செய்துவருங்கால் ஒரு நாள் அவ் வாலயத்துள்ள அறுபத்துமூன்று நாயன்மார்களையும் பார்த்து, இவர்களும் நம போன்ற மானிடர்களாய் இருந்தவர்கள் தானே இவர்களை ஆலயத்தில் வைத்துப் பூஜிக்கின்றார்களே! அம்மாதிரியான பதவியை நாம் எப்போது அடையப்போகிறோம் என்று கதறினார் பிறகு ஞானமேலீட்டினாலே உள்ளத்தினின்றும் அருணாசலம், அருணாசலம அருணாசலம், என்ற சப்தம் உண்டாயிற்று அருணாசலம் என்பது திருவண்ணாமலையெனப்பெரியோர்கூறக்கண்டார். பிறகு படிக்கப்புத்தகத்தை எடுத்தார். புத்தகத்தில் கவனம் செல்லவில்லை இவைகளையெல்லாம் பார்த்த இவர் தமயன் ஏனடா உனக்குப்பயித்தியம் பிடித்து விட்டதா? இம்மாதிரி இருந்தால் இங்கு இருக்கவேண்டாம் எங்கேயாவது போய்விடு என்று பரிகஸித்தார் தமையன்வாக்கை மேற்கொண்ட இவர் திருவண்ணாமலை

செல்ல நிச்சயித்தார். அச்சமயம் பள்ளிக்குக்கட்ட வேண்டிய கட்டணப்பொருள் சிறிது கையிலிருந்தது. அப்பொருளைச்செலவுக்குஎடுத்துக்கொண்டு புகைவண்டி நிலையத்திற்குச்சென்றார் அன்று வழக்கம் போல் 11-30 க்கு வரவேண்டிய புகைவண்டி அவருக்கென 12-மணிக்குவந்தது. தேசப்படத்தை உற்றுநோக்க திருவண்ணாமலை திண்டிவனத்துக்கருகில் இருக்கிறதென நிச்சயித்துத்திண்டிவனத்துக்குப் பயணச்சீட்டுப்பெற்றுக்கொண்டு புகைவண்டியில் ஏறினார் மறுநாட்காலை 4-மணிக்கு விழுப்புரத்தையடைந்தார். பிறகு திண்டிவனம் போகவேண்டிய நிலையென அறிந்து திருவண்ணாமலைக்குப்பயணசீட்டுப்பெறச்சிறிதுபொருள் இருக்கக்கண்டு, மாம்பழப்பட்டினின்றும் திருக்கோவலூர்வரை கால்நடையாகவந்தார பசிமிகுதியால் அங்குள்ள கோயிலையடைந்து கொஞ்சம் பிரஸாதம்பெற்று உண்டார். முத்துகிருஷ்ணபாகவதர் என்ற பெரியாரிடம் தனது காதணியை அடகுவைத்து சிறிதுபொருள் பெற்றுக்கொண்டு திருவண்ணாமலைக்குப்புகைவண்டியேறி 6-மணிக்குவந்தார். உடனே கோயிலையடைந்து நாயனே, உன் ஆக்ஞைப்படி வந்தேன். ரக்ஷித்தருள்கவென்று சிவலிங்கத்தைக்கட்டித்தழுவிக்கொண்டார பிறகு யாராவது பார்த்து விடுவார்களோவென அஞ்சி அதைவிட்டகன்றார்மறுநாட்காலை தலையைமுண்டனஞ்செய்துகொண்டு பக்ஷாணத்தை அறுத்தெறிந்து விட்டுசிவகங்கைக்கரையில் இலுப்பை மரத்தடியில் உட்கார்ந்துக்கொண்டார். பிறகுஆயிரங்கால் மண்டபத்துள் ஓர் குகையில் நிர்வாணமாகத் தங்கியிருந்தார். பிறகுபோலீஸார நிர்பந்திக்கவே, அவைவிட்டு வேட்டவலம ரோட்டிலுள்ள பூந்தோட்டத்தையடைந்தார். பதினேழுவருஷகாலமாய்மலையினமீதுஎழுந்தருளியிருந்தார் அவர்தாயாருஞ்சந்நியாசவேடத்துடன் அவருடனே இருந்து வந்தார் அத்தேவியார்துந்துபி ஆண்டின் வைகாசிதிங்களில்தேகவியோகமடைந்தார் சுவாமிகளது சோதரரும் சந்நியாச

ம் பூஜ்ய ரமணாச்ரமத்திலேயே இருந்து வருகிறார், தாயாரின் சமாதி பொலிகோத்தில வைக்கப்பட்டு பிரதி தினமும் பூஜை நடந்தேறிவருகிறது. தற்போது சுவாமிகள் தாயாரின் சமாதியருகிலேயே ஆச்சிரமமமைத்துக்கொண்டு இருக்கிறார். அவ்வாச்சிரமத்துக்கு அருகாமையில் ஓர் பெரியபடி நிறைந்த மேட்டில் தன் கையால் ஒரு குழி தோண்ட அதனின்றும் நீர் சுரந்தது. பிறகு அதை வெகு நன்றாய் ஆழமாக வெட்டி அதற்கு ரமணபுஷ்கரணி என்று பெயரிட்டிருக்கிறார்கள். இவர் பெயரால் ஸ்ரீ ரமணானந்த நிலயமென்று ஒரு நிலையம் ஸ்தாபிக்கப்பட்டு ஒன்பது ஆண்டுகளாக வெகு சிறப்பாக பொதுக்கூட்டங்கள், நடந்தேறி வருகின்றன. தமிழ்மக்களனைவரும் இம்மஹான் அடியைச்சார்ந்தால் சர்வசித்திகளும் பெறுவார்களென்பது திண்ணம்.

சுபம்

ரமண சரிதம் முற்று.

குறிப்பு,—இஃது முன்னமே லோகோபகாரியில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது.

திருவல்லிக்கேணி
நகர பரிபாலன சபை உயர்தரக்கல்லூரி
தமிழ்ப்பண்டிதர்
செந்தமிழ்க்கவி ஸ்ரீ கோ. வெ. இராமச்சந்திர
அய்யரவர்களியற்றிய தோத்திரப்பாக்கள்

## வெண்பாக்கள்

சுந்தரன் சொன்மாலை சூட்டுந் திருச்சுழியற்
சுந்தரன் மாதவத்திற் றோன்றியதே—சுந்தரஞ்சேர்
வேதம் பழுத்தவாய் வெங்கடரமண
போதம் பழுத்தபொருள். 1.

அன்னப்பன்றேடரியான் செல்வனென்றுவந்த
வென்னப்பன்றாளை யிறைஞ்சுவார்க்—கிவனுறு
மாயாப்பிறவிநோய் வாராது வானமுத
மேயாமலுண்பாருணர்ந்து. 2.

கானற்பிறன்னிருங் காயிற்றமலன் குற்றிரள்வன்
பானலுறுஞ்சிப்பிபோல்வெள்ளி—வானதனிற்
கந்தருவவூரதுபோற் காட்டுகின்ற பொய்யுடலை
யெந்தனதாய் நம்புவேன். 3.

ஏகமுடன் பலவாயென்றைக்குமுள்ளதுவாய்ப்
போகபரமானந்த போதமா—யோக
நிலையமர்ந்த வாழ்வினிலையமர்ந்த நித்த
சலையமர்ந்த மெய்க்குருவேகமர். 4.

வானந்திகழுமணி மந்திரத்தினின்றுபெரு
கானந்தவெள்ளமது புரண்டு—ஞானமாய்
பத்தியுநற் பத்திசத்தி போதவலலிதசமுத்தி
சித்தியருள் வெற்றிதந்ததே 5.

ஊனிறந்துள்ள முயிரு முணர்விறந்து
தானிறந்தா லிபரந்தானிறந்து—வானிறந்து
முற்று முதலொளியாய் நின்றுவளர் மோனகுரு
வத்துவெனையாட்கொள்ளும் வந்து, 6.

ஆரணத்து மாகமத்துமாய்ந்த பொருளிடத்துங்
காரணத்துங் காரியத்தின் கண்ணின்ற—பூரணத்தின்
மெய்யொளியைக்கொண்டிலகு வேதபாசற்குருவென்
பொய்யொளியைக்கொல்லவினைபோம். 7.

ஆசையெலாமற்றவிடமாமதுவே முத்தியெனப்
பேசுமறையாதிபிணக்குறவே—பாசமுறு
நாயேற்கருளளிக்க ஞானகுருவாய்வந்த
நீயேவினையறுக்கநில் 8.

பூச்சுக்கு நங்கையர்கள் பூட்டுகச்சுளார்முலைக்கும்
பேச்சுக் குந்தீஞ்சொற்பிணங்கிற்கும்—வீச்சுக்குங்
காட்டிக்கொடுக்கின்கடையேனுயிர்தரியே
னூட்டியருள தந்திடுவாய்நன்கு. 9.

பூஞ்சயனமுற்றாலும் பொன்னணியைப்பூண்டாலும்
தீஞ்சுவைசொற்பூவையர்தோளைச்சேர்ந்தாலுந்—தாஞ்சத
ரெண்ணமிகவாழ்ந்தாலுமென்னபயன் சற்கு [மென்
சண்ணொளிபடாதவர்கள்காண். [ருவின் 10.

பொய்யுடலின் கட்டறுத்துப் போதநிலையேயறிந்து
மெய்யறிவிலேதனியாய் விட்டருள்வாய்—துய்யவொளி
தற்பரமாய்நின்றிலகுசற்குருவே சாந்தநிலை
யற்புதனேநீதியதுவாய் 11.

கல்லடிக்குமாறாது காமன்கணையடிக்குஞ்
செல்லடிக்குந்தோற்காது தோன்றுமாற்—பல்லடியார்
சிந்தித்துவாழ்த்துந்திருவருணை வெற்பின்றன்
மந்திரத்தினின்ற பெருவாழ்வு. 12.

மாதர்த்தொடக்கறுக்கும் வாளாலகைபாருவிக்குந்
தீதறுக்குஞ்சான்றோரைச்சேர்ப்பிக்கு—மோதக்
கருவாட்சிபூண்டார்தங்கட்டறுக்கு நன்னீர்
விருபாட்சி வாழ்நருளுமெய். 13.

பேர்பெற்றவாழ்வும் பெரும்புகழும் பேசருந
மாற்பெற்றுரென்னைப்போலார்பெறுவார்—நேர்பெற்ற
மெய்ப்பொருளை மெய்க்குகையின் மெய்யறிவைமேல்
கைப்பொருளாய்க்கொண்டதிறற்காண். [வழியிற் 14

ஞானகுகையடைவர் நல்லறிஞர் கானிலத்தி
லின்குகையடைவரேதமுற்றோர்—வானமுகக்
கொப்பளிக்குந்தீங்கனியைக்கோகிலமுட்கொள்ளுமே வே
ம்புசிக்கும் வாயசமேபார். [ம 15.

கலையெறிக்காண்டற்கருநம் பொருளைஞான
மல்லையெறிப்பார்த்துமகிழ்ந்தேகன்—சில்லையெறு
மற்கைமறவர் வயங்குந்திருவருளைப்
பொற்குகையுண்டுறைந்துபோய் 16.

## கட்டளைக்கலித்துறை

---

சொல்லற்கெளிய மலத்திடைநின்றுடற்றுன்பமுற்று
மல்லற்கொடுவாயுசேட்டையாற்றள்ளிமமாநிலதில்
வெல்லற்கரியதாம் வேள்கணைமேனியில்விதைஞ்செய்
யல்லற்படுதலழகோ கிரிக்கிழமர் குருவே.

குறிப்பு—இஃது முன்னமேவிவேகபோதினியில
பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது.

7.

## விண்ணப்பப்பத்து அல்லது குற்றங்கிளத்தல்

திருநேரிசை.

அப்பனே யமரர்க்கெல்லாமறிபனே முறிபஞான
மெய்யனே விமலவிருவேதிப் வினைச்சேர்மாதர்
மைபயிலெகொண்டுநையு மறிவிலேன்மனத்துன்மாழ்கும்
பொய்யனேன்றன்னைக்காவாய் பொருப்புறைரமணத்
[தேவே. 1.

மன்னுறை யுயிர்கட்கெல்லாம்வருத்தலைச்செய்யும்பாவி
புன்னியமறிபாகக்கோழை புனிதரைக்காணுமேழை
என்னிய வெண்ணமெல்லாம் பின்னமே நன்னறில்லை
புன்றுறு முளத்தேன்காவாய் புகழுறுமரமணத்தே
[வே 2.

கருணையைக்கேட்டுமில்லேன்கடவுளர் அடியைப்பேணே
மருநெறிமார்க்கங்கொள்வேன் வாதிற்சூழன்னஞ் [ன்
இருளுறுந்தீபசெய்வேன்என்பவமறுத்தா [செலவேன்
அருளுறுபருணைவெற்பாரன்பனேரம [ட்கொள்வாய்
[ணத்தேவே. 3.

வஞ்சனைநிறைந்தவுள்ளன் வழக்கினைதொடுக்கும்பொல்
நஞ்சினைவைத்தபாந்துவியென்னநடுங்கும்வன் [லேன்
மிஞ்சியசீற்றமிக்கேன விரவலரிடர்கட்கெண்ணி [ணம்
யஞ்சினேன்றன்னைக்காவாயருணைவாழ்ரமணத்தேவே.
4.

முத்தரைபுகழும்ஞானமுத்தரைத்தாணு மோழை
பத்தரைப் பழுவலோதும் பண்டிதப் பண்பினோரைச்
சித்தரைவணங்காச்சென்னிச்சிறியனைப் பெரிதாய்க்கொ
யத்தனேயருணைசைலவமரர்ணரமணத்தேவே. [வா 5.

கிட்டுதற்பொருளைவெளவறிகழுயிர் செகுத்தன்வாயாற்
கொட்டுதறகுடிகெடுத்தல் குருவின்பாலெதிர்த்துப்பே
துட்டர்தமுறவுகோடல்துகளுறுங்கோளைச்சொ [சல்
அட்டியாய்வாழ்ந்ததென்பாலாண்டருள் ரமணத்[ல்லல்
தேவே. 6.

## பிறந்தநாள் பாக்கள்.

ஆதியிடை ஈடையிலாதவரும் பெருநாள்
நீதியுலகெங்குநின்றநாள்—கோதில்
அமலமயமாயருளியநாள் தேவ
ரமணமுனிவந்த நாள். 1.

தானாய் முளைத்தநாள் தான்றனியாயோங்கு நாள்
வானாய் நிலனாய்வந்தநாள்—கோனாய்
இமயவர்க்கு மெட்டாதிருந்தநாள் மோன
ரமணமுனிவந்த நாள். 2.

பிறப்போடிறப்புபிணிமூப்பிலாத
சிறப்போடமர்ந்த திருநாள்—துறக்க
சிமயத்திருக்குநாள்தெய்வமாய் நின்ற
ரமணமுனிவந்த நாள் 3

ஞானச்செழுஞ்சுடராய் நல்லார்க்கொளிதருநாள்
மோனத்திருந்து மொழியுநாள்—ஈனத
தமமறுத்தாளுநாள் சச்சிதானந்த
ரமணமுனிவந்த நாள். 4.

ஆண்டுதிகதியொடு திங்களறியாநாள்
மாண்டார் வழக்கிடவுமாளாநாள்—தாண்டா
விமலபதத்தில் விளங்குநாள் ஆசான்
ரமணமுனிவந்த நாள். 5,

அன்னையொடுதந்தையறியாநாளாரணங்க
ளின்னமுழக்கமிடும பெருநாள்—வன்னக்
கமலத்தனிகள்களிக்கும் அருணை
ரமணமுனிவந்த நாள். 6.

சாதிசமயங்களை யொழுத்து சன்மார்க்க
வீதியிடையில் விளங்குநாள்—மேதி
நயனொளிருடடிந்த நல்லநாளையன்
ர. முனிவந்த நாள். 7.

வேதத்தினுண்மை விளக்கமுறமேவியநாள்
பாதகத்தினுள்ளே பொருந்துநாள்—நீதம்
ருமிருநாள்சாந்தநிறைகடலாமோங்கும்
ரமணமுனிவந்த நாள். 8.

வேதாந்தத்துச்சிவிரவு நாள்மெய்யன்பர்
பூதாநந்தத்துள்ளும்பொருந்தியநாள—வாதார்
சமயமறுத்தாண்டநாள் தன்னருளைநல்க
ரமணமுனிவந்த நாள். 9.

ஞானக்குகைதலைமுயகாடியநாள்கல்லுயிர்க்கு
வானப்பெருக்கைவழங்கியநாள்—மோனத்
தமர்ந்தநாள் யோகர்க்கருளுநாள் சீல
ரமணமுனிவந்த நாள். 10.

குணக்குன்றமேறிகுறை கடியுநாள் நல்
லிணககமுலாதது மெழில்நாள் வணக்க
மமரர்க்குங்காட்டியநாள் ஆரமிழ்தமூன்ட
ரமணமுனிவந்த நாள். 11.

தாணந்தனை மெய்ம்மைசாந்தம் நிறைகல்வி
ஞானமறிவிக்க நாடுநாள்—வான
மமர்ந்துகருணையளிக்குநாள் வெற்றி
ரமணமுனிவந்த நாள். 12.

வித்தின் முளையாய் விரிந்தநாள் விச்சுவத்தை
முத்தி முதலாய் முளைத்தநாள் — சித்தி
யமரும் பெரும்பொருளாயான நாள் ஆண்டார்
ரமணமுனி வந்த நாள். 13.

வானாய்நிலனாய் வளியாய்வளர்ந்த நாள்
தேனாய்ச்சுவையாய்த்திகழுநாள் — நானாய்
நயமாயவனாய் நலமளித்தநன்னாள்
ரமணமுனிவந்த நாள். 14.

இதயமலரிலிருக்குநாள் நல்லோர்
புதையமெலனப்புரக்கும்பொன்னாள் — சிதைவி
லமரர்பரவுநாள் ஆனந்தமேதாங்கும்
ரமணமுனிவந்த நாள். 15.

அந்நாள் சிவத்திற்கருளுக்குகப்பெருமான்
இந்நாளிவ்வுருவமேற்றநாள் — நந்நாள்
விமலவியோமத்தில்வீறுநாள் வேத
ரமணமுனிவந்த நாள். 16.

மும்மைநடவாநாள் முக்குணமுமுட்டாநாள்
செம்மைகருமை செயலறுநாள் — நம்மை
யமரர்க்குமெட்டாவருபொருளிற்சேர்க்கும்
ரமணமுனிவந்த நாள். 17.

பேசாப்பெருநிலையைப்பெற்றநாள் பொய்யுலகி
னாசாபிசாசையடக்குநாள் — ஏசா
சமதமத்தை நண்ணியநாள் சற்குரவனான
ரமணமுனிவந்த நாள். 18.

# நெஞ்சாமதி

## காப்பு

பன்றூன்றி கல்குர்பதமூன்றி பார்க்கவிரு
கண்றூன்றி நீங்காக்கருணையுடன் --டென்றூன்ற
வானோர்வணங்கும் வரையுண்டுவாழ்குரவன்
றேனார்துணையுண்டு நேர்

புன்னைப்புழுமலிந்த புன்னாகம்போய் விடு
மென்றென்று மிருக்கின்றதியனெஞ்சே—மன்னைட்
செய்யபதிவாழ்ரமணதேசிகனைச் சேர்ந்தக்கா [டிற்
னுய்யவழியாகு முனக்கு. 1.

வையத்தில் வாழுயிரை வாங்குமறற்கஞ்சாது
மெய்யைத்துறந்தனியோ நெஞ்சே—பொய்யற்றோர்
செம்பாடல்பெற்றுந்திருவாரமணனார்
தம்பாடலுண்டதனைச்சாற்று. 2.

காரார்குழன்மடவார் கண்வலையிற்பட்டொன்று
மோராதடங்கியுளநெஞ்சே—பேராருந்
தென்னருணைமால்வரையின் றேசிகனார் சேவடியை
யுன்னவருந்தானே யுயர். 3.

பண்ணொடுத்தவேதம் பாவும்பராபரனைக்
கண்ணொடுத்துப்பாராக்கடைநெஞ்சே—தண்ணொடுத்த
நீருவிமாமலையவித்தனிரமணமேவன்
சீரடியில்வாழ் வாய் தினம். 4.

முன்னடிக்குவன்னெஞ்சர்முன்னடந்து முன்னவனின்
பொன்னடிக்குவெட்டதுருப்புன்னெஞ்சே—தன்னடிக்
வாழவருட்சாக்கும்வால்வரையில்வாழ்குரவன் [கீழ்
வாழல்றப்பானுனர். 5

உண்மையறியா துலகிறுழன்றயரு
மெண்மையுடைய வினைநெஞ்சே — அண்மையினிற்
றேனூருஞ்சோலைத் திருவருணை தேசிகனின்
வானூருஞ்சேவடியில் வாழ். 6.

மாயவலையில்மயங்கிக்கிடந்துலக
நேயம்படைத்துள்ளநெஞ்சமே — தாயமிகும்
வாக்கற்று நின்றவரைமுனிவன்மாமலர்க்கண்
ணோககுற்றால்வல்வினைபோநுன். 7.

எட்டிலெழுதவடங்காவிரும்பிறவிக்
கூட்டிலவிழுந்து குறைநெஞ்சே — மேட்டிமையாய்
தனவிலையிலோங்கித்தழைக்கு மிரமணவேள்
முன்னிலையில் வாழ்வாய்முனம். 8.

அன்னையினுமிக்கவருளூட்டுமந்தணவன்
றன்னைமறந்தசடநெஞ்சே — வன்னமயில
ஆடிககளிக தமருணமலையானை
கூடிக்களிப்பாய்குவித்து 9.

புல்லறிவோர்தங்குழவிற்போயடைந்துபொய்பலவாய்ச்
சொல்லிப்பிழைக்குநதுயர்நெஞ்சே — வல்ல
வினைமயார்பதமம்வணடாவின்னமுதமம்வெண்டா 10
சிமயத்தூறுங்குருபாத செல

ஸ்ரீரமணத்தோத்திரப்பாக்கள் மு



